
அதிர்ஷ்டசாலி ஹான்ஸ்
பால் காலடூன்
தமிழில் கிருஷ்ணன்

# அதிர்ஷ்டசாலி ஹான்ஸ்

பால் காலடூன்

தமிழில் கிருஷ்ணன்





ஹான்ஸ் ஏழு வருடங்களாக விடுமுறை எதுவும் இல்லாமல் வேலை செய்து விட்டான். இப்போது “அம்மாவை பார்க்க வேண்டும் போல் இருக்கிறது” என்று அவனுடைய முதலாளியிடம் கூறினான்.

“நீ எனக்கு விசுவாசமாய் இவ்வளவு நாள் வேலை பார்த்திருக்க. அதற்காக சன்மானமாய் உனக்கு இந்த தங்கத்தை தருகிறேன் என்று தன் வழுக்கை தலை அளவிற்கு ஒரு தங்க கட்டியை அவனிடம் கொடுத்தார்.

தங்க கட்டியை ஒரு துணியில் போட்டு மூட்டை போல ஹான்ஸ் கட்டி கொண்டான். அதை ஒரு குச்சியின் நுனியில் கட்டி தன் தோளில் வைத்து கொண்டு அவன் வீட்டை நோக்கி நடக்க தொடங்கினான்.





கனமான மூட்டையை எடுத்துக் கொண்டு நடந்து கொண்டிருந்த ஹான்ஸ்  போகும் வழியில் ஒரு குதிரையை ஒட்டி கொண்டு வரும் மனிதரை சந்தித்தான்.

“ஆஹா இந்த கனமான தங்க கட்டியை சுமந்து செல்வதை விட இந்த குதிரை மேல் உட்கார்ந்து வீட்டிற்கு சென்றால் எப்படி இருக்கும்” என்று உரக்கமாக அந்த குதிரையில் வந்திருந்த மனிதரின் காதில் படும்படி கூறினான்.

இதை கேட்ட அந்த மனிதர் “என் குதிரையை வேண்டுமென்றால் நீ எடுத்துக் கொள் அதற்கு பதிலாக உன் தங்க கட்டியை எனக்கு கொடுத்து விடு” என்று கூறினார். “தாரளமாக என் தங்க கட்டியை எடுத்து கொள்ளுங்கள் ஆனால் நான் இப்போதே  சொல்லி விடுகிறேன் அது மிகவும் பாரமானது” என்றான் ஹான்ஸ்



ஹான்ஸின் தங்கத்தை பெற்று கொண்டு அந்த குதிரைக்காரர் அவனை அந்த குதிரையில் ஏற்றி விட்டு விடை கொடுத்தார். போவதற்கு முன் “உனக்கு குதிரை வேகமாக போக வேண்டுமானால் நாக்கை மடக்கி டொக்.. டொக்.. என்று சத்தம் போடு குதிரை காற்றை கிழித்து பறந்து விடும் ” என்றார்.

மகிழ்ச்சியோடு குதிரையில் ஹான்ஸ் சென்று கொண்டிருந்தான். இன்னும் வேகமாக செல்ல நினைத்து நாக்கை மடக்கி “டொக்.. டொக்..” என்று சத்தமிட்டான்.

“டொக்.. டொக்..” சத்தம்  கேட்டவுடன் குதிரை துள்ளி குதித்தது, ஹான்ஸையும் தள்ளி விட்டு விட்டது. ஒரு பள்ளத்தில் போய் விழுந்தான் ஹான்ஸ்.



அதிர்ஷ்டவசமாக அந்த வழியாக தன் மாட்டோட  வந்த விவசாயி ஒருவர் அந்த குதிரை ஓடுவதற்கு முன்பு பிடித்து விட்டார். காயங்களோடு ஹான்ஸ் ஒரு வழியாக எழுந்து நின்றான்.

“ஐயோ என் உயிரை பதம் பார்க்க நினைக்கும் இந்த குதிரை மேல நான் ஏற மாட்டேன். அதுக்கு பதிலா நேரம் ஆனாலும் பரவாயில்லை உங்க மாடு மாதிரி எது பின்னாடியும் மெதுவா நடந்து போய் ஊரு சேர்ந்தாலே போதும். மாடாவது பால் கொடுக்கும், அதிலிருந்து தயிர் கிடைக்கும், வெண்ணை கிடைக்கும்” என்று சொன்னான் ஹான்ஸ்.



“சரி, அப்படின்னா எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை நீ உன் குதிரையை எனக்கு தந்தால் நான் உனக்கு இந்த மாட்டை தருகிறேன்” என்றார் அந்த விவசாயி.

ஹான்ஸ் மகிழ்ச்சியுடன் அதற்கு ஒப்பு கொண்டான். விவசாயியும் தன் மாட்டை ஹான்ஸிடம் கொடுத்து விட்டு குதிரை மேல ஏறி பறந்து விட்டார்.

“இனி எனக்கு எப்போதும் வெண்ணை கிடைக்கும். தாகம் வரும்போதெல்லாம் பாலும் பருகலாம். இதற்கு மேல் என்ன வேண்டும்!” என்று நினைத்து கொண்டே நடந்தான்.

மாட்டை ஓட்டிக் கொண்டு போன ஹான்ஸ் இந்த மாடு தனக்கு கிடைத்தது நல்ல அதிர்ஷ்டம் தான் என்று நினைத்து கொண்டே மெல்ல மாட்டின் பின்னாடி நடந்து போனான்.

மதிய வெயில் கடுமையாக இருந்ததால் மாட்டை மரத்தின் கீழ் கட்டி விட்டு ஹான்ஸும் உட்கார்ந்தான். தாகமாக இருந்ததால் தொப்பியை கீழே வைத்து மாட்டின் மடியிலிருந்து பால் கறக்க முயற்சி செய்தான் ஹான்ஸ்.





ஒரு சொட்டு பால் கூட  வரவில்லை. ஆனால் பதிலாக மாடு தன் பின்னங்கால்களால் ஒரு எத்து விட்டது. ஹான்ஸ் அப்படியே படுத்து விட்டான்.

அப்போது  பார்த்து ஒரு கசாப்பு கடைக்காரன் ஒரு பன்றியொடு அங்கு நடந்து வந்தான். “என்ன சமாச்சாரம் இப்படி கிடக்கிறாய்” என்று கேட்டான் ஹான்ஸிடம். உடனே தன் சோக கதையை அவனிடம் கொட்டி தீர்த்து விட்டான்.

இந்தா கொஞ்சம் தண்ணி குடி. இந்த வயதான மாட்டை என்னிடம் விடு அதற்கு பதிலாக இந்த இளம் பன்றியை ஒட்டி கொண்டு போ என்றான் கசாப்புக் கடைக்காரன்

“கடவுள் கொடுத்த வரம்” என்று கூறி கொண்டே மாட்டை கொடுத்து பன்றியை பெற்று கொண்டான் ஹான்ஸ். தான் அதிர்ஷ்டசாலி தான் என்று நினைத்து கொண்டே அந்த இளம் பன்றியோடு ஓடினான் ஹான்ஸ்.





கொஞ்ச நேரத்தில் ஒரு வாத்து கொண்டு வருபவரை சந்தித்தான் ஹான்ஸ். அவர் நல்ல மனிதர் போல் அவனுக்கு தோன்றியது. அவரிடம் தான் இந்த பயணத்தில் அனுபவிக்க நேர்ந்ததை எல்லாம் கூறினான்.

வாத்தை கொண்டு வந்தவர் தான் இதை சந்தைக்கு எடுத்து செல்வதாக ஹான்ஸிடம் கூறினார். “இது எவ்வளவு கனமாக இருக்கிறது என்று தொட்டு தான் பாரேன் என்றார், ஆமாம் ஆமாம் நல்ல கனமாக தான் இருக்கிறது, என் பன்றியும் நல்ல கணம் தான்” என்றான் ஹான்ஸ்.

சுத்தி.. முத்தி.. பார்த்து விட்டு ஹான்ஸின் காதில் மெதுவாக “விஷயம் உனக்கு தெரியாதா? இந்த ஊருல ஒரு பன்றியை காணோம் என்று சிலர் தேடிகிட்டு இருக்காங்க நீ அவுங்க கண்ணில பட்டுராத” என்று கூறினார் அந்த வாத்துகாரர். பாவம் ஹான்ஸ் இதை கேட்டவுடன் பயந்தே போயிட்டான்.

“நானே இந்த ஊருக்கு புதுசு இந்த பன்றியை வைத்து கொண்டு உங்கள் வாத்தை கொடுங்களேன்” என்றான் பரிதாபமாக.





“உனக்கு எந்த பிரச்சினையும் வர கூடாது என்ற ஒரே காரணத்துனால நான் என் வாத்தை உனக்கு கொடுக்கிறேன்” என்று சொல்லி ஹான்ஸிடம் இருந்த அந்த இளம் பன்றியை ஒட்டி சென்றார். ஹான்ஸும் அந்த வாத்தை எடுத்து கொண்டு தன் அம்மா இதை பார்த்தால் சந்தோசம் அடைவாள் என்று நினைத்து கொண்டே நடந்தான்.



வீட்டை அடைவதற்கு சற்று முன்னாலேயே ஒரு கத்தி சாணம் பிடிப்பவரை கண்டான் ஹான்ஸ். அவர் செய்யும் வேலையையே பார்த்து கொண்டு நின்று கொண்டிருந்தான் ஹான்ஸ். “நல்ல வருமானம் உங்களுக்கு இந்த வேலையில் கிடைக்குதா” என்று அவரிடம் கேட்டான் ஹான்ஸ்.

“நல்ல வருமானம் வந்தா தானே நிம்மதியோட வேலை செய்ய முடியும்” என்றார் அந்த கத்தி தீட்டுபவர். உனக்கும் இது போன்று வேலை செய்து சம்பாரிக்க வேண்டுமானால் இந்த கத்தி தீட்டும் கல்லை வாங்கி கொள் பதிலுக்கு அந்த வாத்தை எனக்கு கொடுத்து விடு என்றார்.

“காசு கையிலுருந்தா தான மனுஷனுக்கு மரியாதை. இதோ பிடிங்க என்னுடைய வாத்தை” என்று கூறினான் ஹான்ஸ்.

அந்த கத்தி தீட்டுபவரும் அவருடைய பழைய கல்லை ஹான்ஸிடம் கொடுத்து அனுப்பினார்.

ஹான்ஸ் கல்லை எடுத்து கொண்டு பெருமிதத்துடன் சென்றான்.



கத்தி தீட்டும் கல்லோ மிகவும் கனமாக
இருந்தது. அதை சுமந்து கொண்டு
மெதுவாக சென்ற ஹான்ஸ் ஒரு
கிணற்றடிக்கு வந்து சேர்ந்தான்.
கல்லை கிணற்றின் மேல் வைத்து விட்டு
குளிர்ந்த நீரை பருக குனிந்தான்.



ஹான்ஸ் குனிந்த சமயத்தில் அவனை அறியாமல் அந்த கல்லின் மேல் சாய்ந்து விட்டான். கல்லும் கிணற்றில் விழுந்தது. அந்த கனமான கல் விழுந்தது ஏதோ பெரிய பாரத்தை இறக்கியது போல் ஆனது ஹான்ஸுக்கு. என்னை போல் ஒரு அதிர்ஷ்டசாலி இங்கு யாரும் இல்லை என்று நினைத்து ஹான்ஸ் மகிழ்ச்சியுடன் குதித்தான்.





இப்படி ஒருவேலையாக வீட்டிற்கு
வந்து சேர்ந்தான். நடந்தவை
அனைத்தையும் அவன்
அம்மாவிடம் கூறினான். “கடவுள்
தான் உன்னை கொண்டு வந்து
என்னிடம் சேர்த்தான்” என்று
கூறினாள் அவனுடைய அம்மா.